(மனத்தாலும்வாயாலும்) இதில் - ஆழ்வார்திருவடிகளே ப்ராபகமும் ப்ராப்யமுமாகிறபடியை அந்வயவ்யதிரேகங்களிரண்டாலும் தர்ஶிப்பிக்கிறது.

(மனத்தாலும்வாயாலும் வண்குருகூர் பேணுமினத்தாரையல்லாதிறைஞ்சேன்) மனத்தாலும்வாயாலும் வண்குருகூர்பேணுகையாவது - "திருக்குருகூரதனையுளங்கொள் ஞானத்துவைம்மின்" "திருக்குருகூரதனைப்பாடி யாடிப்பரவிச்சென்மின்கள்" என்றுமழ்வாருபதேஶங்கேட்டபடியே, மநஸ்ஸாலேநினைத்தும் வாயாலேசொல்லியும்போருகை. பேணுகை - விரும்புகை. "யந்மநஸா த்யாயதி தத்வாசா வததி" (யந்மநஸாத்யாயதி தத்வாசாவததி) என்னக்கடவதிறே. இப்படியாழ்வார்ஸம்பந்தமுடையதேஶத்திலே விருப்பமுடையவர்களை யல்லது பஜித்தேன். ஆழ்வார்ஸம்பந்தி ஸம்பந்திகளையொழிய அந்யரையாதரித்தறியேன். (வண்குருகூர்பேணுமினத்தார்) * நல்லார்நவில்குருகூரிறே. (இனத்தார்) ஸமூஹமாயுள்ளவர்கள். அன்றிக்கே, ஸஜாதீயரென்றுகவுமாம். இந்நால் - * குருகூர்ச்சடகோபன் பாட்டானதிருவாய்மொழியிலே அந்வயமுடைய ஸ்ரீவைஷ்ணவஸமூஹத்தையென்றபடி. * குழாங்கொள் தென்குருகூரிறே. இந்நால் - திருவாய்மொழியிலே அதிப்ரவணரானவர்களையொழிய அந்யரையாதரியேனென்றதாயிற்று. இப்படியந்யரையநாதரிக்கைக்கடியுடைமைசொல்லுகிறது (தனத்தாலுமேதுங்குறைவிலேனென்று) "யந்ஶ்ரீயந்நவபாதபங்கஜம்" (தந்மதீயந்நவபாதபங்கஜம்) என்கிறபடியே ஆழ்வார்திருவடிகளைப்பற்றினநமக்கு "விபூதிஸ்ஸர்வம்" (விபூதிஸ்ஸர்வம்) என்னும்படி. தனத்தாலுமேதுங்குறைவிலேன் - ஒன்றுங்குறையுடையேனல்லேன். (எந்தைசடகோபன்) "அன்னையாயத்தனாய" "மாதாபிதா" (மாதாபிதா) என்னும்படி. எனக்குஜநகரான ஆழ்வார். (பாதங்கள்) ப்ராப்யப்ரேஷியானவர்திருவடிகள். (யாமுடையபற்று) தச்சேஷபூதரான நமமுடையபற்று. "தகையானசரணமதமாகடகோர்பற்று," யாமுடையபற்றுவாயிற்று. ௩

## அநந்தாழ்வானருளிச்செய்தது.

ஏய்ந்தபெருங்கீர்த்தியிராமாநுசமுனிதன்
வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேன் - ஆய்ந்தபெருஞ்
சீர்ார்சடகோபன்செந்தமிழ்வேதந்தரிக்கும்
பேராதவுள்ளம்பெற.

இனி, "சடகோபன்பாதங்கள்" என்றதைவிவரியாநின்றுகொண்டு, திருவாய்மொழி ஹ்ருத்கதமாம்படி, ஆழ்வார்க்குபாரதந்த்ரரான வுடையவர் திருவடிகளைத்தொழாநின்றேனென்கிறது.

(ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமாநுசமுனிதன் வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேனென்று) (ஏய்ந்தபெருங்கீர்த்தியிராமாநுசமுனிதன்) "ஏற்றும்பெரும்புகழ் வானவரீசன" என்னுமாபோலே அங்குத்தைக்கநுரூபமாயப்பொருந்தியிருக்கிற பெரியபுகழையுடைய எம்பெருமானார் தம்முடைய (வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன்) ஒன்றுக்கொன்று பொருந்தியிருப்பதாய மலர்போன்ற திருவடிகளை ப்ரணதிபண்ணுகின்றேன். "ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே" (ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே) என்கிறபடியே, ப்ராப்யபுத்த்யா - வாத்தமாநமாயச்சொல்லுகிறது. இப்படிவணங்குகிறது,

ஆக்காகவென்னில ( ஆய்ந்தபெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும் பேராதவுள்ளம்பெற ) ( ஆய்ந்தபெருஞ்சீராசடகோபன் ) "ஆய்கொண்டசீர்" என்றும், "ஆயபெரும்புகழ" என்றுஞ்சொல்லுகிறபடியே, ஆயப்படும் விலக்ஷணமாய நிரவதிகமான கல்யாணகுணங்களால பூர்ணரான ஆழ்வாருடையதாய் அதிஸ்தூலபமானத்ராவிடவேதந்தைதரிக்கும்படி நிஸ்சலமானமநஸ்ஸைப்பெற.

அன்றிக்கே, ஆய்ந்தபெருஞ்சீரானென்று - * செந்தமிழ்வேதத்துக்கு விசேஷணமாகவுமாம்; * சீர்த்தொடையாயிரமிறே. இந்தப்ரபந்ததாரணார்த்தமாகவாய்ந்தமலர்ப்பாதம வணங்குகின்றேன. * தீமனங்கெடுத்து * மருவித்தொழுமனத்தை ஆசார்யன தரவேணுமிறே, ஆகையால "தங்குமனமநீயெனக்குத்தா" என்னும்படி, பேராதவுள்ளம்பெறவென்று - எம்பெருமானாரைப்ரார்த்திக்கிறது. அதாவது - இவர்தான், * மாறனடிபணிந்துய்ந்தவராய் "மாறன்பணித்தமறையுணர்ந்தோனை" என்றும், "தென்குருகைப்பிரான்பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ் தன்னைத்தன் பத்தியென்னும் வீட்டினகண்வைத்தவிராமாநுசன" என்றும், * பண்டருமாறன் பசுந்தமிழானந்தம பாயமதமாகவுடையராய, * திருவாய்மொழியினினிசைமனனுமிடந்தொறுமிருக்கு மவராய, * உறுபெருஞ்செல்வமும் மாறன விளங்கியசீர் நெறிதரும்செந்தமிழ்மறைநிதரநிற்குமவராகையாலும், அவர்திருவடிகள் ராமாநுசனுகையாலு மிவரை ஆதரிக்கிறது. "மற்றையாழ்வார்களதிவ்யப்ரபந்தங்களை அங்கோபாங்கமாகவுடைய இவருடைய த்ராவிடவேதமான திவ்யப்ரபந்தமொழிய தத்தரக்ரந்தங்களில் சபலமானமநஸ்ஸுசலியாமலிதொன்றிலுமே யுறறுநிலைநிற்கவேணும" என்று அவரை ஆதரிக்கிறதெனகை ...... ......ச

## பட்டருளிச்செய்தது.

வானதிகழுஞ்சோலைமதிளரங்கர்வணபுகழ்மே
லான்றதமிழ்மறைகளாயிரமு - மீனற
முதறருய்சடகோபனமொயமபால்வளர்த்த
இதததாயிராமாநுசன்.

இனி, இதில - திருவாய்மொழியினுடைய உதபாதகரையும வர்த்தகரையுஞ்சொல்லுகிறது.

( வானதிகழுஞ்சோலையென்று ) ( வானதிகழுஞ்சோலையாவது ) வானிலே - ஆகாஸததிலே. திகழுகிற - ப்ரகாஸிக்கிறசோலையென்றபடி. "வ்ருக்ஷஷண்டமிதோ தாஹாதி," ( வருக்ஷஷண்டமிதோபாதி ) "வானேநதுசோலை." * சோலையணிதிருவரங்கமிறே. ( மதிளரங்கர் ) "திடகொடிமதிள்சூழ," "மதிள்திருவரங்கம." அதுவும் * வானையுந்துமதிளாயிருக்கை. ( வான்திகழுஞ்சோலை ) உயர்ந்தசோலையையும மதிளையுமுடையகோயிலே நிரூபகமான பெரியபெருமாளுடைய ஸ்லாக்யமான கல்யாணகுணவிஷயமாய விஸ்தருதமாயிறறு ஆயிரந்திருவாய்மொழியும். "முகில்வண்ணனடிமேற்சொன்ன சொன்மாலையாயி———" என்னக்கடவதிறே. அதுதான் * சீர்த்தொடையாயிரமென்று - சீர்கலந்தசொல்லாயிறேயிருப்பது. "நலமுடையவன்" "ஈறிலவண்புகழ நாரணன" என்றுபகரமித்து, "வாழபுகழ்நாரணன" என்றிறே தலைகட்டியருளினார். பெரியபெருமாள்தான - * நலந்தி

ணடாய் " என்று - கூறருஞ்சொலலுமவாகளையும் தனசொல்லாலே வாயப்புடைபு டைத்துத்தன் வசமாககி, " தியவுந்திககஞசன " என்று கருததைககுலைதது "கா ப்பாருமிலலை" என்று இரநது " அசோணாவளாககினற செயததலை நீலநிறததுச சிறபிளளை " என்னுமபடி நிறம்பெறவளாததது பரமேயஸாரததைவாததிபபிததா றபோலே, பரமாணஸாரததை வாததிபபிததபரகாரமும். அதெங்ஙனேயெனனி ல ; இஙகும ஆழவாரவதரிபபிததது * அவாவறறு வீடுபெறறெழுநதருளினபினபு, பாஹ்யகுதருஷடிகளாலே * பாஷாகாநமான திருவாயமொழி அபிபூதமாயவருகி றபடியைககணடு, பாஷயஸூக்திகளாலே யத்தைவிரோதிதது அத்தையிதுககுககா வலான வேலியாகக்கறபிதது, திருவாயமொழியைததம் கைவசமாககி, திருககுரு கைப்பிரானபிளளானைக்கொண்டு இதினாசத்ததை வெளியிடுவிதது வாததிபபிதது க்கொண்டுபோநதாரிறே. "மாறனடிபணிநதுயநதவன" என்னுமபடியானஅடியா ராகையாலே, ஆணடவனிட்டபயிாைவாததிபபிககவேணுமிறேயடியானுக்கு . ரு

> மிக்கவிறைநிலையுமெய்யாமுயிர்நிலையும்
> தககநெறியுநதடையாகித - தொககியலு
> மூழவினையுமவாழவினையுமோதுங்குருகையர்கோன்
> யாழினிசைவேததியல.

( மிககவிறைநிலையிதயாதி ) " ஸ்ரீவதிஸ்வதநஸ்யாஸ்யஹேத்வ த்வநஸாஸ்யதஃ। க்நிஷ்டாநிஷ்டஸ்வராஷ்த்ருக்தவ்யம்" ( ஸ்ரீ பதிஸசேதநஸயாஸயஹேதுதவேநஸமாஸரிதஃ। அநிஷடஹாநிமிஷடஸயபராப்தி ஞசகுருதேஸவயம் ) என்று ஸகலவேதஸங்க்ரஹமான திருமந்தரததில பதத்ரய ததாலும பரதிபாதிககபபடுகிற அாததபஞசகததை, " திருமாலாலருளபபட்டச டகோபன் " என்னுமபடி ஸ்ரியஃபதியான ஸாவேஸ்வரனாலே * மயாவறமதிநலம ருளபபெறற ஆழவாரருளிசசெயத * திருமாலவனகவியான திருவாயமொழிபர பநதம் பரதிபாதிதத பரகாரததை யிததனியனிலே சொலலிததலைககட்டுகிறது.

( மிககவிறைநிலையும் மெய்யாமுயிாநிலையும தக்கநெறியுமதடையாகிதொ ககியலு மூழவினையுமவாழவினையுங்குருகையாகோன் யாழினிசைவேததியலோ துமென்று ) மிககவிறைநிலையாவது - " இறைநிலையுணாவரிது " என்னும்படியான ஸாவஸமாதபரதவம். " தமீஸ்வராணாம்பரமம்மஹேஸ்வரம்தந்தேவதாநாம் பரமஞ்சதைவதம் " ( தமீஸ்வராணுமபரமமமஹேஸவரம தநதேவதாநாமபர மஞசதைவம ) " நாராயணபரோஜ்யோதிஃ " (நாராயணபரோஜயோதிஃ) என்றும், " தத்வம்நாராயணஃபரஃ " (தததவம்நாராயணஃபரஃ) என்றும, "மனி ஸாககுததேவாபோலததேவாக்குநதேவாவோ" என்றும, "தேவதேவனை" என்று ம, "பரஞ்சோதிநீபரமாய" என்றும, "மிகுஞ்சோதி" என்றும, "முழுதுணடபர பரன" என்றும், "வானோரிறை" என்றும, "கழிபெருநதெயவம்" என்றும, "பெ ருநதெயவம்" என்றும, "பெரியவபபனைப பிரமனபபனை யுருத்திரனபபனை" என ஹும், "திருவுடையடிகள்" என்றும, "திருமகளார்தனிககேள்வனபெருமையுடைய பிரானார" என்றும, " திருமாமகளகேள்வாதேவா " என்றுஞ்சொலலப்படுகிற ஸ ர்வஸமாதபரனையாயிறறு. ( மிககவிறையெனகிறது ) " திருமஙகைநினறருளுந் தெயவம " " திருமாலையல்லதுதெயவமெனறேத்தேன " " திருவிலலாததேவரை

த்தேறேன்மினதேவு" என்னக்கடவதிறே. இதுவாயிற்று பரஸ்வரூபம். இறைநிலை யாவது - ஸௌலப்யத்துக்கவவருகில்லாதபடி முடிந்தநிலமான ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தோடேயிருக்கிற அர்ச்சாவதாரமென்கை. அதுதையாயிற்று "எளிவரும" இத்யாதியிற்சொன்னது. இதிறே யீஶ்வரஸ்வரூபயாதாதம்யம்.

மெய்யாமுயிர்நிலையாவது - "உருவியந்தவிந்நிலைமை" என்றும் "எண் பெருக்கந்நலத்தொண்பொருள" என்றும், "உணர்வைப்பெறவூர்ந்து" என்று ம், "நின்றவொன்றை" என்றும், "உயிர்விடுடையான" என்றும் - பரகருதேஃ பரனாய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபனுய ஜ்ஞாநகுணகனுய நித்யனுயீஶ்வரனுக்கு ஶரீரவ தபரதந்த்ரனுனபடியைச் சொல்லுகிறது. மெய்யாமுயிரென்கையாலே - "ஸத்யஞ்ச" (ஸத்யஞ்ச) என்றும், "உள்ளதும" என்றும், "மெய்மமைமையே" என்றுஞ்சொல்லுகையாலே பரக்ருதிஸ்வபாவத்திறகாட்டிலாத்மஸ்வரூபநித்யத்வ ஞ்சொல்லிற்று. அன்றிக்கே, மெய்யாமுயிரென்கையாலே - "யஸ்யாத்மா ஶரீ ரம்" (யஸ்யாத்மாஶரீரம்) என்கிறபடியே "உள்ளதவுரு" என்றுஶரீரஶரீரி பாவஞ்சொல்லிற்றாகவுமாம். உயிர்நிலையாவது - "மெய்மமைமையேமிகவுணர்ந்து" என்கிறபடியே, "தம்மடியாரடியோங்கள்" என்றும், "தொண்டன்சடகோப ன்" என்றும், "சிறுமாமனிசராயென்னையாண்டார்" என்றும், ததீயபாரதந்த்ரமா னநிலை. இதிறே ஸ்வஸ்வரூபயாதாதம்யம்.

தக்கநெறியாவது - அத்யந்த பாரதந்த்ரஸ்வரூபத்துக்கு அநுரூபமானவுபா யம். அல்லாதது தகாதநெறியாயிறேயிருப்பது, "நெறிகாட்டிநீக்குதியோ" எ ன்னக்கடவதிறே. "நீயம்மாகாட்டும்நெறி" "கண்ணனல்லாலில்லைகண்டீர்சர ண்"; ஶரீரரக்ஷணம் ஶரீரிக்கேபரமிறே; [ மாஶுச: ] (மாஶுச:) என்னுட ம்பிலழுக்கை நானேபோக்கிக்கொள்ளேனோ வென்றிறேயவனவார்த்தை. "எம மையாளும்பரமர்" என்றுததீயஶேஷத்வம் ஸ்வரூபமானால், "நன்மைபெறு த்தெம்மைநாளுய்யக்கொள்கின்றநம்பர்" என்றவர்களேயுபாயமாகவும் வேணு மிறே; (தக்கநெறி) ததீயோபாயமாகவுமாம். உபாயயாதாதம்யமிதுவிறே.

தடையாகித்தொக்கியலுமூழ்வினையாவது - விரோதியாய்த்திரண்டு வார்த் திக்கிற ப்ராக்தநகர்மமென்கை. "முன்செய்தமுழுவினை" "பாரமாயபழவினை" என்னக்கடவதிறே. ஊழ்மை - பழமை. வினை - கர்மம். "பொய்ந்நின்ற ஞானமும பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்," "அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதி ஸம்பந்த." (அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதிஸம்பந்தம்.) * பகவத்ஸ்வரூ பதிரோதாநகரியிறேதேஹம். விரோதிஸ்வரூபயாதாதம்யம் - அஹங்காரமமகாரங்க ள்; "யானேயென்னை யறியகிலாதேயானேயென்ற னதேயென்றிருந்தேன" "நீர்நுமதென்றிவை வேர்முதன்மாய்த்து" "பீஜமேதத்த்விதாஸத்திதம்." (பீஜ மேதத்த்விதாஸத்திதம்.) "முன்னமே" என்னும்படி அநாதியாயிறேபோருவது. இதுதானநுகூலர்பக்கல அநாதரத்தைப்பிறப்பிக்குமதாயிருக்கும், அதுதான தே ஹாத்மப்ரமமூலமாகையாலே ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்திலஜந்மநிரூபணத்திலே மூட்டியநர்த்தத்திலே பர்யவஸிக்கும்; "அதிலேஒன்றவர்கள்பக்கல ஜந்மநிரூபண ம" என்றாரிறே. "மன்பக்கல்சேவிப்பார்க்கன்பு செய்வார் சன்மநிரூபணமாவி க்குநேரேயழுக்கு" என்றுமிற்று அதின கரௌர்யமிருப்பது, "அமரவோரங்கம" இத்யாதி.

வாழ்வினையாவது - வாழ்வையென்றபடி. வாழ்வினையென்று - முழுச்சொல். வாழ்வாவது - * நின்தாளிணைக்கீழ் வாழ்ச்சியைப்பெற்று * வாழ்வெய்தி ஞாலம்புகழவாழ்வர் என்றபடி. " தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே " " உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும " என்றுஅவனுகந்தபடியைச் செய்தாநந்திக்கை அன்றிக்கே, " அவனடியார் நனிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்குநங்கட்கே " என்கிறபடியே, " அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை " என்றுஞ்சொல்லுகிறசரம ப்ராப்யமாகவுமாம். இதிறே ப்ராப

( குருகையர்கோனயாழினிசைவேதத்தியலோதும் ) இந்த அர்த்தபஞ்சகத்தையும் ஓதுகையாவது - " ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் " ( ப்ராப்யஸ்யபரஹ்மணோரூபம் ) இத்யாதியில " முநயஶ்ச மஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந: வதந்தி " ( முநயஶ்சமஹாத்மானோவேதவேதார்த்தவேதிந:வதந்தி ) என்கிறபடியே, சடகோபமுனியானஇவர் திவ்யஸூக்தியும் * இமையோரதிபதியடியேன்மனனே பொய்ம்மயர்வுபிறந்தருளினன் விண்ணப்பம் தொழுதெழு என்று பஞ்சகத்தையு மடியிலேயாயிற்று சொல்லிற்று ; " உயர்திண்ணணையொன்றுபயிலேறுகண்கருவீடுசொன்னதொலொருகக்கொண்டநோற்ற நாலுமெம்மாவொழிநெடுவேய் என்கிறஇருபதிலே விஸ்தமாக்கி எண்பதிலே பரப்புகையாலே அஞ்சையும் " என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே யருளிச்செய்தது. குருகையர்கோன்யாழினிசைவேதமாவது - ஸம்ஸ்க்ருதவேதம்போலே தான்றோன்றியன்றிக்கே, " எய்தற்கரிய மறைகளையாயிரமின் றமிழாற்செய்தற் குலகில்வரும் சடகோபன் " என்னும்படியாழ்வாராலே யருளிச்செய்யப்பட்ட அதிசயத்தையுடைத்தாய், " யாழினிசையே " என்றுகாநஸ்வரூபியான ஸர்வேஶ்வரனை ப்ரதிபாதிக்கையாலே " பண்ணார்பாடல் " " பண்புரையிசைகொள்வேதம " என்னலாம்படி " பண்கொளாயிரம " என்று ஸாமவேதம்போலே ஸரஸமாயிருக்கை. இதினுடையவேதஸாம்யமெல்லாம ஆசார்யஹ்ருதயத்திலே விசதமாகஅருளிச்செய்தார், அதிலேகண்டு கொள்வது. " விண்மீதிருப்பாய " என்கிறபாட்டிலே பரஸ்வரூபங்காணலாம், ஆத்மஸ்வரூபம * அடியார்ந்தவையத்திலேகாணலாம, உபாயஸ்வரூபம் * உழலையிலேகாணலாம், விரோதிஸ்வரூபம் " அகற்றநீவைத்த " என்கிறதிலேகாணலாம், பலம் உற்றேனிலேயுணரலாம. அர்த்தபஞ்சகஜ்ஞாநத்தாலேயிறே " அந்தமில்பேரின்பத்தினபுறுகையும் " என்று அறுதியிட்டருளிற்று. * எண்பெருக்கந்நலத்திலும், " எனக்கேயாட்செய் " " ஒழிவில்காலம் " " வேங்கடங்கள் " " சீலமில்லா " " கள்வாய " " ஞாலத்தூடே " என்கிறபாட்டுக்களிலும் - திருமந்த்ரார்த்தம்காணலாயிருக்கும். அகாரத்தாலும, மகாரத்தாலும் - ரக்ஷகனையும், ரக்ஷ்யத்தையுஞ் சொல்லி, சதுர்த்தியாலு முகாரத்தாலும் - ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையுஞ்சொல்லுகிறது ; ஸவிபக்திகமான நாராயணபதத்திலே - ஸர்வஸ்மாத்பரன்திருவடிகளில கைங்கர்யத்தைச்சொல்லுகையாலே, திருமந்த்ரம்-அர்த்தபஞ்சகப்ரதிபாதகமென்னுமிடம ஸ்பஷ்டமிறே ; ஆகையாலே திருவாய்மொழியில்

ப்ரதிபாதிக்குமர்த்தமெல்லாம அர்த்தபஞ்சகப்ரதிபாதகமான திருமந்த்ரார்த்த மென்னததட்டில்லை. "ஸ்ரீவதிஶ்ருதநஸ்ராவ" ( ஸ்ரீபதிஸ்சேதநஸ்யா ஸ்ய ) என்கிறஸ்லோகத்திலே யருளிச்செய்தஅர்த்தபஞ்சகமும், இதிலிரண்டிரண டுபத்தாலே ஓரோவர்த்தம்பரதிபாதிக்கப்படுகிறது" என்றுதிருவாயமொழியின் உரைப்ரவேஸத்திலே வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரருளிச்செய்தாரிறே..௬

---

திலதமுலகுக்கானதிருவேங்கடத்தானை, யலகில்புகழ்ந்தாதியாயிரமு - மூலகி -
லுரைத்தான்சடகோபனுத்தமர்களநெஞ்சில், விரித்தானபெருமபூதூராவேந்து.

பிள்ளைலோகம்ஜீயர்திருவடிகளேசரணம்.

ஸ்ரீ



மதுரகவியாழ்வார்
திருவடிகளே சரணம்.

நாதமுனிகள்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி

வ்யாக்யாநமாகிய

# ஸ்ரீ பகவத்விஷயம்.

பன்னீராயிரப்படி.

## திருவாய்மொழியினவதாரிகை.

[illegible]।
[illegible]॥

ஸாங்கோபப்ருஹ்மண ஸகலவேதவேதாந்த ஸாரார்த்த ப்ரகாசகமாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மக ஸவிபூதிக பகவதநுபவ பரவருத்ய பரபக்திஸிந்து பரீவாஹரூபமாய், ஸாம்ஸாரிக ஸகலதாபதாவாநல நிர்வாபண ஸரஸாம்ருத ப்ரவாஹபூராத்மகமாய், நித்யபரதயகரநிரவதிகாதிசய பரமாநந்த ஸந்தோஹஸமவாத்தகமாய், ஸகலஜநோஜ்ஜீவநார்த்தமாக ஸர்வேஸ்வரன் தன்பரமகாருணிகத்வத்தாலே ஸ்வஹ்ருதயத்திலே ப்ரவர்த்திப்பிக்க ஸர்வாதிகாரி யோக்யமான த்ராமிடபாஷா ஸந்த

ர்ப்பத்தாலே ப்ரதமாசார்யரான நம்மாழ்வாரருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், திருவந்தாதி, திருவாய்மொழியாகிற ப்ரபந்தங்களில், திருவிருத்தத்திலே ஸம்ஸாரஸம்பந்த நிவ்ருத்தியை யபேக்ஷித்து, திருவாசிரியத்திலே நிவ்ருத்தஸம்ஸாரர்க் கநுபாவ்யமான ஸௌந்தர்யாதிகளை யநுபவித்து, திருவந்தாதியிலே அநுபவஜநிதமான அபிநிவேசாதிசயத்தைப்பேசி, திருவாய்மொழியிலே அபிநிவேசாநுரூபமாக பூர்ணமான பகவத்விஷயத்தை யநுபவித்து இவர்க்ருதார்த்தரானார். இதில் சரமமான திருவாய்மொழியாகிற திவ்யப்ரபந்தம் "ஸ்ரீபதிரேவ சேதநஸ்யாஸ்ய ஹேதுஸ்ஸந்நாஸ்ரித: | அநிஷ்டஹாநிமிஷ்டஸ்வப்ராப்திம் ச கரோதி ஸ்வயம்" என்று, ஸ்ரீய:பதியானவன் சேதநனுக்கு உபாயபூதனாய் ஆஸ்ரிதனுக்கொண்டு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டமான ஸ்வப்ராப்தியையும் தானேபண்ணிக்கொடுக்குமென்று, அநுயாயியான மஹாவாக்யார்த்தத்தை ப்ரதிபாதிக்கிறது. இப்ரபந்தம் ஸர்வஸாஸ்த்ரஸாரோப ப்ருஹ்மணம்பண்ணுகிறதாகையாலே ஸகலவேதஸாஸ்த்ரதாத்பர்யமான அர்த்தபஞ்சகமு மிப்ரபந்தத்திறுடைய மஹாவாக்யார்த்தத்திலே அந்தர்ப்பூதம், (ஸ்ரீபதி:) என்று, ப்ராப்யமானப்ரஹ்மத்தினுடையஸ்வரூபமும், (சேதநஸ்ய) என்று, ப்ரத்யகாத்மஸ்வரூபமும், ஹேதுர்வே ந என்று, உபாயஸ்வரூபமும், அநிஷ்டஹாநிம்என்று, ப்ராப்திவிரோதிநிவ்ருத்தியும், இஷ்டஸ்வப்ராப்தி என்று, ப்ராப்திபலாவாப்தியுமான அர்த்தபஞ்சகமும்ஸூசிதமாகிறது. இப்ரபந்தத்தில்முதலிட்டு நாலுபத்தாலே ஸித்தரூபமான பராவராத்ம யாதாத்ம்யத்தை ப்ரதிபாதிக்கிறது, முடிவிட்டு நாலுபத்தாலே ஸாத்யரூபமான அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகேஷ்டப்ராப்தியை ப்ரதிபாதிக்கிறது, நடுவிட்டிரண்டுபத்தாலே ஸித்தஸாத்யரூபமான நிரபாயோபாயவரணத்தைப்ரதிபாதிக்கிறது, ஸித்தமான வுபாயத்தினுடையவரணம ஸாத்யமென்றுகருத்து. அதில்ஸித்தரூபமான பராவராத்மயாதாத்ம்ய ப்ரதிபாதகமான முதல நாலுபத்தில், முதற்பத்து மிரண்டாம்பத்தும், ப்ராப்யமான பரஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. மூன்றும பத்தும் நாலாம்பத்தும் ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. அஞ்சாம்பத்து மாறும்பத்தும் ப்ராப்த்யுபாய ஸ்வீகாரத்தை ப்ரதிபாதிக்கிறது. ஏழாம்பத்து மெட்டாம்பத்தும் ப்ராப்திவிரோதி நிவ்ருத்தியை ப்ரதிபாதிக்கிறது. ஒன்பதாம்பத்தும் பத்தாமபத்தும் ப்ராப்திபலஸித்தியை ப்ரதிபாதிக்கிறது. அதில் முதற்பத்து பரனை சேஷியினுடைய ரக்ஷகத்வத்தையும் இரண்டாம் பத்து போக்யத்வத்தையும் சொல்லுகிறது. மூன்றாம்பத்து பகவதேகசேஷபூதனை ஆத்மாவினுடைய ததேகாநுபவத்வத்தையும், நாலாம்பத்து ததேகப்ரியத்வத்தையும் சொல்லுகிறது. அஞ்சாமபத்து நிரபாயமான வுபாயவேஷத்தையும், ஆறும்பத்து தத்வரணப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது. ஏழாம்பத்து அநிஷ்டமானவிரோதி ப்ரகாரத்தையும், எட்டாம்பத்து தந்நிவ்ருத்தி ப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது. ஒன்பதாம்பத்து பலப்ரகாரத்தையும், பத்தாம்பத்து ததவாப்தி ப்ரகாரத்தையுஞ் சொல்லுகிறது. ஆக இவ்வர்த்தபஞ்சகத்தினுடைய அவாந்தரார்த்த பேதத்தாலே இப்ரபந்தத்தில் பத்துப்பத்துக்கும வாக்யார்த்தம சொல்லிற்றாயிற்

௩. அதில் சேஷியினுடைய ரக்ஷகத்வபரமானமுதற்பத்தில் முதற்றிருவாய்மொழி ரக்ஷகதவோபயுக்தமான ஸர்வஸ்மாத்பரத்வததையும், இரண்டாந்திருவாய்மொழி ஸாவஸமாஶ்ரயணீயதவததையும், மூன்றாநதிருவாய்மொழி ததநுகுணமான ஸௌலப்யத்தையும், நாலாந்திருவாயமொழி ஆஶ்ரிதாபராதஸஹத்வத்தையும், அஞ்சாநதிருவாய்மொழி ஸௌஶீல்யாதிசயத்தையும், ஆறாநதிருவாய்மொழி ஸ்வாராததையையும், ஏழாந்திருவாய்மொழி ஆஶ்ரயணததிலத்யநதஸ்வாரஸ்யத்தையும், எட்டாந்திருவாய்மொழி ஆஶ்ரிதவிஷயமான வார்ஜ்ஜவகுணத்தையும், ஒன்பதாந்திருவாயமொழி ஸாதம்யபோக ப்ரதத்வத்தையும, பததாநதிருவாய்மொழி நிர்ஹேதுகமஹோபகாரிதவததையுஞ் சொல்லுகையாலே பரமசேஷியினுடைய ரக்ஷகதவபூர்த்தியை ப்ரதிபாதிததாயிற்று. அதில பரத்வ பரகாசகமான முதற்றிருவாயமொழியில் தத்பயாதகமான விலக்ஷணகுணவிபூதி விக்ரஹயோகத்தையும், ததாஶ்ரயமான ஸ்வரூபவைலக்ஷண்யததையும், அபரிச்சிந்நமான லீலாவிபூதி ஸம்பநததையும், அநநதரம் மூனறுபாட்டாலே விபூத்யநதர்க்கத ஸமஸ்தபதார்த்தங்களினுடைய ஸ்வரூபஸத்திதி ப்ரவ்ருதயாதிகள் ஸ்வாதீநங்களென்னு மிடத்தையும், அதில் முதற்பாட்டில் ஸமஸதபதார்ததங்களினுடைய ஸ்வரூபம் ஸாமாநாதிகரண்யததாலே ததநிநமெனனு மிடததையும, ரக்ஷணரூபையானஸ்த்திதி, வையதிகரணயத்தாலே ததநிநயென்னுமிடததையும், ஸர்வப்ரவ்ருத்திநிவ்ருத்திகளும் ஸாமாநாதிகரணயததாலே ததநிநகளென்னுமிடததையும், ததபயாதகமான சரீராதமபாவ ஸம்பந்தத்தையும், அநநயேஶ்வரத்வததையும், அவைதிகரால் அப்ரகம்பயதவத்தையும், அகில வ்யாபகத்வத்தையுஞ்சொல்லி அசேஷசேஷித்வரூபமான பரதவததை ஸ்ததிரீகரிததருளுகிறார்.

## ௩௬.

## மஹாப்ரவேஶம் - முதல்ஶ்ரியஃபதி.

ஶ்ரியஃபதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேஶ்வரன், "மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து" என்கிறபடியே ஜன்மபரம்பரைகளிலே தோள்மாறி நித்யஸம்ஸாரியாய்ப் போந்தவிவரை "அடியையடைந்துள்ளந்தேறி யீறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன்" என்று முதலிலே தன்திருவாயாலே சொல்லவல்லராம்படியாக முதலடியிலே விசேஷகடாக்ஷம்பண்ணி யருளினான். "[illegible] ।[illegible]" என்கிறபடியே ஶ்ரீப்ருந்தாவநத்தை "உத்தேநவக்ஷா[illegible]" என்னும்படி கடாக்ஷித்தாற்போலே தத்வங்களை விஶதமாக அறியவல்லராம்படி கடாக்ஷிததான். இதரதர்ஶநங்களில் தத்வங்களைப்பதினா

றென்பார், ஆறென்பாராய் பஹுப்ரகாரங்களிலே விப்ரதிபத்திபண்ணு
வர்கள்.

எங்ஙனேயென்னில், லோகாயதிகன், ப்ருதிவ்யாதி பூதங்கள் நா
லினுடைய கூட்டரவிலே சைதந்யமென்றொரு தர்மம்பிறக்கும், அதுக்கு
ண்டான சுகதுக்கங்களே ஸ்வர்க்கநரகங்கள், அவற்றினுடைய பிரிவிலே
சைதந்யம் நசிக்கும்; அவவருகொன்றுமில்லையென்பதவனுடைய ஸித்தா
ந்தம். ஆர்ஹதன், கார்யகாரணரூபத்தாலே ஜகத்து நித்யாநித்யமும் பி
ந்நாபிந்நமும ஸத்யாஸத்யமுமாயிருக்கும்; ஆத்மாக்கள காமரூபமா
ன சரீரங்களினுடைய பரிமாணத்தையே தனக்குப்பரிமாணமாகக்கொ
ண்டிருக்கும்; ஸம்ஸாரமநாதி, மலதாரணாதிகளாலு மாத்மஜ்ஞாநத்தா
லும் ப்ரக்ருதிவிநிர்முக்தராய் ஊர்த்வகதியை ப்ராபியாநிற்கை மோக்ஷ
மாகிறதென்றுன். பௌத்தமதங்களில வைநதுககொண்டு வைபாஷிக
ன், பரமாணுஸங்காதமாய் ப்ரத்யக்ஷ ஸித்தமாயிருக்கும ஜகத்து; தத்வி
ஷயஜ்ஞாநமும் க்ஷணிகம்; வேறேயாத்மாவில்லை; இதில் ஸ்திரத்வபு
த்தி-ஸம்ஸாரம், க்ஷணிகபுத்தி-மோக்ஷமென்றுன். ஸௌத்ராந்திகனுக்கு
ம் ஸித்தாந்தமதுவேயாயிருக்கச்செய்தே அநுமாநஸித்தம் ஜகத்தென்று
ன், அதுவே அவனுக்கு விசேஷம். யோகாசாரன் ஜ்ஞாத்ருஜ்ஞேயங்க
ள் ப்ரமம், ஜ்ஞாநமேயுள்ளது, அதுவும் க்ஷணிகமென்றிருக்கை மோ
க்ஷமென்றுன். மாத்யமிகன் ப்ரமாணமும், ப்ரமேயமும், ப்ரமாதாவு
மிவை யுண்டென்றறிகை ப்ரமம, சூந்யத்தாலே சூந்யமென்றறிகை
மோக்ஷமென்றுன்.'' நையாயிக வைசேஷிகர்கள் ஜகத்துக்குபாதாநகார
ணம் பரமாணுக்கள், ஆநுமாநிகேஶ்வரன் நிமித்தகாரணம், ஸம்ஸாரம
நாதி, ஈஶ்வரோபாஸநியாலே சுகதுக்கஜ்ஞாநங்கள் நசிக்கை மோக்ஷ
மென்றூர்கள். பாசுபதன் பரமாணுக்கள் ஜகத்துக்குபாதாநகாரணம்,
ஆகமஸித்தேஶ்வரன்நிமித்தகாரணம், ஸம்ஸாரமநாதி, ஆகமோக்தமான
கர்மாநுஷ்டாநத்தாலே பசுபதிசாரூப்யத்தைப்பெறுகை, மோக்ஷமெ
ன்றுன். சாங்கயயோகிகள் ப்ரக்ருதியே ஸ்வதந்த்ரமாயக்கொண்டு ஜகத்
காரணமாகிறது, அந்த ப்ரக்ருதியோ டாத்மாவுக்குண்டான வநாதிஸம்
பந்தம் ஸம்ஸாரம், ப்ரக்ருதி புருஷவிவேகம் மோக்ஷமென்றூர்கள். பாட்
ட்ப்ராபாகரர்கள் நித்யரா யநேகராய் ஸாவகதராய் அநாதிகாமத்தாலே
ஸம்ஸரிக்கிறூர்கள்ஆத்மாக்கள், ஜகத்து ப்ரவாஹரூபேண நித்யம், கர்மா
நுஷ்டாநபூர்வமே ஆத்மப்ராப்திரூபமோக்ஷஹேது, ஈஶ்வர ஸத்பாவமில்லையென்
றூர்கள். மாயாவாதி, நிர்விசேஷ சிந்மாத்ரமே மாயாசபளமாய்க்கொ
ண்டு ப்ரமிக்கை ஸம்ஸாரம், "தத்த்வமஸி" இத்யாதிவாக்யஜந்ய ஜ்ஞாநத்

தாலே அந்தப்ரமம்போகை மோக்ஷமென்ருன். பாஸ்கரீயன், அந்தப்ர மந்தானே ஸத்யோபாதி மிஶ்ரமாய்க்கொண்டு ப்ரமிக்கைஸம்ஸாரம், வா ஸ்ரம தர்மோபேதமாய் வாக்யஜந்யஜ்ஞாநபூர்வகமாயுள்ள உபாஸ நாத்மகஜ்ஞாநத்தாலே உபாதிநிவ்ருத்தி மோக்ஷமென்ருன். யாதவப்ர காசன், அந்த ப்ரமந்தானே ஸத்யமான சிதசிதீஶ்வராத்மகமாய்க்கொண் டு ப்ரமிக்கிறது, அதுக்குண்டான பேதஜ்ஞாநம் ஸம்ஸாரம், ஜ்ஞாநகர் மஸமுச்சயத்தினுலே பேதஜ்ஞாநம்போகை மோக்ஷமென்ருன். ப்ரமம் ஜகத்காரணமென்கிற வைதிகஸித்தாந்தத்திற்காட்டில் ஏகாயநன்ப்ரமத தை கல்பயசக்திவிசிஷ்டமாககொண்டானததனே, அதுவே அவனுக்கு விசேஷம். ஆகஸித்தாந்தங்கள பதினேழும் பாஹ்யங்களும் குத்ருஷ்டி களுமாகையாலே வ்யர்த்தங்கள். ஸந்தாஸநத்துக்குத் தத்வங்கள்மூன் று; அவையாவன, சித்துமசித்து மீஶ்வரனும. ப்ரகார ப்ரகாரிகள ஐக யத்தாலே ஒன்றென்னலாய், ஸ்வரூபபேதத்தாலே பலவென்னலாயிரு க்கும். அசித்தாகிறது குணத்ரயாத்மகமாய் நித்யமாய் விபுவாய் ஸததப ரிணமியாய் ஹேயதயாஜ்ஞேயமாயிருக்கும். இப்படியிருக்கிற அசித் திலே போக்யதாபுத்திபண்ணி ஸம்ஸாரத்தைத்ருடமாக்கிகொள்ளவே ணுமென்றிருக்கு மவனுக்கும் ஸர்வேஶ்வரனே யாஶ்ரயிககவேணும், இ து த்யாஜ்யமெனனும் ப்ரதிபத்தியுண்டாய் இத்தைக கழித்துக்கொள்ள வேணுமென்றிருக்குமவனுககும ஸர்வேஶ்வரனே யாஶ்ரயிககவேணும், "ஸம்ஸாரபந்தஸ்திதிமோக்ஷ ஹேது:" என்றும் "தைவீஹ்யேஷா குணமயீமமமாயாதுரத்யயா । மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந் தரந்திதே" என்றும் சொல்லுகிறபடியே, நான்பிணைததபிணை யொருவ ராலவிழ்க்கப்போகாது, எனனையே கால்கட்டி யவிழ்த்துக்கொள்ளவே ணுமென்ருனிறே. அதுதன்னையே யிவரும் "பொல்லாவாக்கையின்பு ணர்வினையறுக்கலுறச்சொல்லா யானுன்னைசசாாவதோர்சூழச்சி" என் ருரிறே. "ஒருகுருவி பிணைத்தபிணை ஒருவராலவிழ்க்கப்போகிறதில்லை, ஸாவஶக்தி, காமாநுகுணமாகப்பிணைததபிணையை யவனேயே கால்கட்டி யவிழ்த்துககொள்ளுமித்தனைகாண்" என்று பிளளை திருநறையூ ரரையா வார்த்தை. சேதநன் நித்யனுய் அணுவாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணனுய் ஜ்ஞாநகுணகனுய் ஏகரூபனுய் பகவச்சேஷபூதனுயிருககும். இப்படியிரு க்கிற ஆத்மாவினுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்திதது "ஜராமரண மோக்ஷாய" என்கிறபடியே ஆத்மாநுபவ மமையுமென்றிருக்குமவனுக் கும் ஸர்வேஶ்வரனேயுபாஸிக்கையு மந்திமஸ்ம்ருதியும்வேணும், ஆத்மா

நுபவத்தைநெகிழ்ந்து ஸர்வேஸ்வரனுடையகுணாநுபவம்பண்ணவேணு மென்றிருக்குமவனுக்கும் அவன்றன்னையே உபாயமாகப்பற்றவேணும். இவற்றிலொன்றை யறியிலும †"ஒண்டாமரையாள்கேள்வனொருவனை யே நோக்குமுணர்வு" என்கிறபடியே ஸர்வேஸ்வரனளவிலே பர்யவ ஸித்தன்றி நில்லாது. ஜ்ஞாநமாகில் ஸ்ரீய:பதியைப்பற்றியல்லது நில்லா து. பகவத்வ்யதிரிக்தவிஷயங்களைப்பற்றிப்பிறக்கும ஜ்ஞாநமெல்லா மஜ்ஞாநகல்பம, "தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்" "தத்கர்ம யந்ந பந்தாய ஸாவித்யா யா விமுக்தயே ஆயாஸாயாபரம்கர்ம வித்யாந்யா ஶில்பநை புணம்" என்கிறபடியே பகவத்விஷயத்தையொழியக் கற்றவையெல் லாம் செருப்புக் குத்தக்கற்றவோபாதி. இப்படியிருக்கிற சித்சித்ஈஸ்வ ரர்கள் ஸ்வரூபஸ்பாவங்களை யறியக்கடவாரொருவருமில்லை, இவற்றையு ள்ளபடியறிவாரில் தலைவராயிற்றிவவாழ்வார்.

இவர்க்கு ஒப்புச்சொல்லலாவார் ஸம்ஸாரிகளிலுமில்லை, நித்ய ஸூரிகளிலுமில்லை. தம்படிதாமுமறியார்; ஸம்ஸாரிகளுமறியார்கள்; ஸர் வேஸ்வரனுமறியான். ஒருஸாதநத்தை யநுஷ்டித்து இந்நன்மை நமக் குவருமென்றிருக்கவந்த தல்லாமையாலே தாமுமறியார், இவரைப் போலே யிருப்பாரை ஸம்ஸாரத்தில் காணாமையாலே ஸம்ஸாரிகளுமறி யார்கள், தன்குணங்கள் புறம்பொருவ்யக்தியி லிப்படி பலிக்கக்காணா மையாலே ஸர்வேஸ்வரனுமறியான். ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தரான வோபாதி நித்யஸூரிகளிலும்வ்யாவ்ருத்தர், ‡"அடியாரிலாநின்றவைகு ந்தமோவையமோ நுந்நிலையிடம்" என்று உபயவிபூதியிலுமடங்காதிருப பர், *"விண்ணுளாரிலும்சீரியர்" என்னும்படியாயிற்றிவர்நிலை; பகவதநு பவத்துக்குப பாங்கான தேசத்திலே இருந்து அநுபவிக்கிறவர்களைப் போலன்றே அவ்வநுபவத்துக்கு மேட்டுநிலமான ஸம்ஸாரத்திலேயிரு ந்தநுபவிக்கிறவர்கள். "கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரமீஶ்வரம்| நார்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதா ஜநா:" என்கிறபடி யே கலிகாலத்திலே பகவத்ருசியொருவர்க்கும்பிறக்கிறதல்ல. "துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷணபங்குர:| தத்ராபி துர்லபம் மந்யே வைகுண்டப்ரியதர்ஶநம்" என்கிறபடியே முதல்தன்னிலே மநுஷ்யசரீரங்கிடையாது, பெற்றாலும் ஸர்வேஸ்வரன் ப்ராப்யனென்று அவனைப்பெறுகைக் கநுரூபமாயிருப்பதொரு உபாயத்தைப்பரிக்ரஹிக்க வேணுமென்னும் ருசிஒருவர்க்கும்பிறவாது, இதுண்டாகிலுமுண்டாம், பாகவத சேஷத்வம் உண்டாகாதென்னுமிடம் சொல்லவேண்டாவிறே.

"ஜநஷ்ராணாம்ஸஹஸ்ரேஷு கஸ்சித்யததிஸித்தயே। யததாமபிஸித்தாநாம் கஸ்சிந்மாம்வேத்தி தத்த்வத:" என்று ஸர்வேஸ்வரன்றானு மருளிச் செய்தான்.

இப்படியிருக்கிற ஸம்ஸாரத்திலே ஆழ்வார்வந்தவதீர்ணரானவி துசேதநர்பண்ணின ஸுக்ருதபலமாயிற்று. "ததோகிலஜகத்பத்மபோதாயாச்யுதபாநுநா" என்கிறபடியே ஸர்வேஸ்வரன்வந்தவதரித்தாற்போலேயாயிற்று ஆழ்வாரவந்தவதரித்தபடி. ஆதித்யன் பாஹ்யமான அந்தகாரத்தைப்போக்கும், இவனாந்தரமான அந்தகாரத்தைப் போக்கிகொண்டாயிற்றிருப்பது. அப்படியேயிவரும் "ஊருநாடுமுலகமுந்தன்னைப்போல்" "மரங்களுமிரங்கும்வகை" என்றும் * பாலேதமிழரிசைகாரர் பத்தர்பரவும்படியாயும் "கேட்டாரராரானவர்கள்" என்றும் "பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத்தான்பாடித் தென்னாவென்னுமென்னம்மான்" என்னும்படி யிப்படியே தம்முடையநன்மையெங்குமுண்டான வெல்லாக்குமுண்டாம்படி பண்ணிக்கொண்டாயிற்றிருப்பது. "ஹஸிதம்பாஷிதம்சைவ கதிர்யா யச்ச சேஷ்டிதம்। தத்ஸர்வம்தர்மவீர்யேண யதாவத்ஸம்ப்ரபச்யதி॥" என்கிறபடியே (ப்ரஹ்மரின் ப்ரஸாதத்தாலே ஸ்ரீவால்மீகிபகவான் ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரித்தாற்போலேஇவரும) பகவத் ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்க்ருதமான பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையராயிருப்பர். "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" ஐஸ்வர்யம், ஆத்மலாபம், ஏதேனுமொருபுருஷார்த்தமாகவுமாம் நம்பக்கலிலேகொள்ளுமவர்கள் உதாரர், ஜ்ஞாநியானவன் எனக்கு தாரகனென்று ஸர்வேஸ்வரனருளிசசெய்த ஜ்ஞாநிகளுக்கக்ரேஸரராயிருப்பர். "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்தந:" என்றுபால்யந்தொடங்கி பெருமாள் திருததொட்டிலோடணையத் திருத்தொட்டி விடாதபோது பள்ளிகொள்ளாத இளையபெருமாளைப்போலேயிவரும் பருவம்நிரம்புவதற்குமுன்பே பகவத்குணைகதாரகராயிருப்பர். "அறியாக்காலததுள்ளேயடிமைககணன்புசெய்வித்து" என்றும் †"மூலையோமுழுமுற்றும்போந்தில - பெருமானமலையோ திருவேங்கடமென்றுகற்கின்றவாசகம்" என்றும்சொலலுகிறபடியே. "நசஸீதாத்வயாஹீநா நசாஹமபிராகவ। முஹூர்த்தமபிஜீவாவோஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" உம்மையொழிந்தவன்று பிராட்டியுமில்லை, அடியேனுமில்லை, ஜீவித்தோமோ, முஹூர்த்தம்; என்போலே? என்றால், ஜலாதுத் த்ருதமானமத்ஸ்யம் நீரகசையறுமளவும் ஜீவிக்குமாபோலே; நீரிறுத்தப்

போகிறேமென்கிறவார்த்தை யும்முடையதிருவுள்ளத்திலே உண்டென்றறியுமளவுங்காணும் நாங்கள் ஜீவிப்பதென்றாரிறே. அந்தலையில் நினைவாலேயிறேயித்தலைஜீவிப்பது, ‡ "எத்தேவர்வாலாட்டுமெவ்வாறுசெய்கையும்போதொழியும" என்கிறபடியே அவனினைவில்லாதவன்று இவையுமில்லையிறே. அப்படியே யிவரும் "நின்னலாலிலேன்காண்" என்றிருப்பாரொருவர். "ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே। ஐஸ்வர்யம் வாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா" "வானவர்நாடு" என்கிறபரமபதம், ஆத்மலாபம், லோகாந்தரைஸ்வர்யம், இவையித்தனையும் உமக்குப்புறமபாய்வருமன்று வேண்டேனென்ற இளையபெருமாளைப்போலேயிவரும் †"திருவொடுமருவியவியற்கைமாயாபெருவிறலுலகமூன்றினொடுநல்வீடுபெறினுங்கொள்வதெண்ணுமோ" என்றும். "எம்மாவீட்டுத்திறமும்செப்பம்" என்றும், "பாவியேனைப்பலநீகாட்டிப்படுப்பாயோ" என்றும் இதரபுருஷார்த்த ப்ரஸ்தாவத்திலே வெருவுமஸ்வபாவருமாயிருப்பர். "அஹம் தாவந் மஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே। ப்ராதா பர்த்தா ச பந்துஸ்ச பிதா ச மம ராகவ:" என்று பெருமாளையே யெல்லாவுறவுமாகப்பற்றின இளையபெருமாளைப்போலே யிவரும் "சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமு நன்மக்களுமேலாத் தாய்தந்தையுமவரே" என்று பகவதைகாந்த்யஸீமையாயிருப்பர். "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதஸ்ச தே। பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே" என்றிளையபெருமாள் ஸர்வவிதகைங்கர்யங்களும்செய்தல்லது தரியாதாற்போலே, இவரும் "ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலாவடிமைசெய்யவேண்டும" என்று எல்லாவடிமைகளும்செய்தல்லது தரியாததன்மையராயிருப்பர்.

"விக்லேஷேணாந்தே நாயோத்யாம் விஹாஸ்ய திம் வஜநாத் புந" "ந தத பஶ்யாமாஸ்தம் பஶ்யேதேநா நராதிப:" என்றும்சொல்லுகிற ஆஜ்ஜந தசரதாதிகளைப்போலே காலதத்வமுள்ளதனையு மநுபவியாநின்றாலும் "அப்பொழுதைககப்பொழுதென்னாராவமுதம" என்னும்படிமேன்மேலெனப்பெருகிவருகிற ஆராதகாதலையுடையராயிருப்பர்.

"யஸ்மிந் த்ராஸஸ்த்ரைஸ்வாதி ஸர்வாணா நாதிகாஸ்த்யஸ்யா। உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்" என்று ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானை சாதுக்களுக்கெல்லா முபமாநபூமியாகச் சொலலுகிறபடிபோலே எல்லார்க்கும் தமமுடைய ஓரோ வகைகளாலே உபமாந பூமியுமாயிருப்பர்.

" [illegible] ",
என்று குணங்களுக்குத்தோற்றடிமைபுக்க இளையபெருமாளைப்போலே
யிவரும் பகவத்குணங்களிலேதோற்று " உயர்வறவுயர்நலமுடையவன்
றுயரறுசுடரடி தொழுதெழென்மனனே" என்றார்.

இப்படி பகவத்ஸ்வரூபரூபகுண விபூதிகளை விசதவிசததர விசத
தமமாகவநுபவித்து அங்குள்ளடங்காமைவழிந்து புறப்பட்டசொல்லா
யிற்றிப்ரபந்தங்கள்.

இங்ஙனேயாகில, இப்ரபந்தங்களுக்குப் பாட்டும் ஸங்க்யையும்
பாட்டுக்கு நாலடியாகையும அக்ஷரங்கள ஸமமாகையும் " எழுத்தசை
சீர்பந்தமடிதொடைபாவினம" என்றாற்போலே சொல்லுகிற ப்ரபந்த
லக்ஷணங்கள் சேரவிழுந்தபடியெங்ஙனேயெனனில், சோகவேகத்தாலே
பிறந்த " [illegible] " இத்யாதிஶ்லோகமானது " [illegible] " என்
கிற ஶ்லோகத்தின்படியே அத்திககாயி லறுமானபோலே பகவத்விபூதி
யிலேகதேஶஸ்தத்தனான ப்ரஹ்மாவின ப்ரஸாதத்தாலே ஸர்வலக்ஷணோ
பேதமானாற்போலே பகவத்ப்ரஸாதமடியாகப்பிறந்த இப்ரபந்தங்களுக
கு இவற்றில கூடாததில்லை.

இவையென்ன கோடியிலே யடைக்கப்பட்ட ப்ரபந்தங்கள் ? இவை
பிறந்தபடி யெங்ஙனே ? இவற்றுக்கு மூலமென ? ஒன்றை மூலமாகச்
சொன்னா லதுமூலமென்றறியும்படி யெங்ஙனே ? இவை ப்ரமாணமெ
ன்றறிவதெத்தாலே ? இவற்றுக்கு ப்ரதிபாத்யரார் ? இப்ரபந்தங்கள் கற்
கைக்கதிகாரிகளார் ? இவற்றுக்கு போக்தாக்களார் ? இவையெதுக்காகப்
பண்ணப்பட்டன ? என்று சில அவ்யுத்பன்னர்கேட்க; இவை புருஷார்
த்த ப்ரகாஶகமான ப்ரபந்தங்களில ப்ரதாநப்ரபந்தங்கள், பகவத்குணா
நுபவஜநித ஹர்ஷப்ரகர்ஷ பலாத்காரம் சொல்லுவிக்கப்பிறந்தன, பக
வத்ப்ரஸாதலப்தமான திவ்யசக்ஷுர்மூலமாகப் பிறந்தனவென்னுமிடம்
ஸ்வரவசநவ்யக்திகளாலே யறியலாம, வேதார்த்தவித்துக்களான ஸர்வ
ஶிஷ்டர்களும பரிக்ரஹிக்கையாலும்ஸமஸாரத்திலுத்வேகம்பிறந்தார்க்கு
ஜ்ஞாதவ்யமான வேதார்த்தங்களையிப்ரபந்தங்களிலே காண்கையாலுமி
வை யுத்க்ருஷ்டதமமான ப்ரமாணமென்றறியலாம், எல்லார்க்கும் பரம
ப்ராப்யபூதனான ஶ்ரிய:பதி யிப்ரபந்தங்களுக்கு ப்ரதிபாத்யன, ஸம்ஸா
ரத்தில் ருசியற்று எம்பெருமானறிருவடிகளிலே எப்போதப்பட்டவடிமை
களும செய்யவேணுமென்றிருக்குமவனிவைகற்கைக்கதிகாரி, முமுக்ஷு
க்களும் முக்தரும நித்யரு மெம்பெருமான்றானு மிவற்றுக்குபோக்தா
க்கள, பகவத்கைங்கர்யமாகிற நிரதிஶயபுருஷார்த்தமின்னபடிப்பட்டிரு

க்குமென்று அறிவிக்கைக்காகப் பிறந்த ப்ரபந்தங்களிவையென்று சிரோபா
ஸித ஸத்க்ருதராயிருப்பார்கள் பரிஹரித்தார்கள்.

நிஷித்தபாஷையாகையாலும், இப்ரபந்தங்களை வேதாநதிகா
ரிகளப்யஸிக்கக் காண்கையாலும், கலிகாலத்திலே ஜ்ஞாநத்துக்கடைவி
ல்லாத சதுர்த்தவர்ணத்திலே பிறந்தாரொருவராலே நிர்மிதங்களாகை
யாலும், தேஶாந்தரங்களிலின்றிக்கே பராதேஶிகங்களாகையாலும், அ
வைதிகா பரிக்ரஹிக்கையாலும், ஶ்ருதி ஸ்ம்ருதி விருத்தமான காமபுரு
ஷார்த்தத்தைப் பலவிடங்களிலும் பேசுகையாலும், ஶ்ருதி ஸ்ம்ருதிக
ளிலே புருஷார்த்தமாய்ச் சொல்லப்படுகிற ஐஶ்வர்ய கைவல்யங்களைக்
காற்கடைக்கொள்ளுகையாலும், இப்ரபந்தங்கள் ப்ரமாணமாகமாட்டா
வென்று வைதிககோஷ்டியில் பழக்கமில்லாதார் சிலவறிவுகேடா வந்து
ப்ரத்யவஸ்தாநம்பண்ண; மாத்ஸ்யபுராணத்திலே, பாஷாந்தரத்தாலே
பாடாநின்றுள்ள கைஶிகாதிகளைத் தன்னாட்டினின்றும் போகவிட்ட ராஜா
வைக்குறித்து "ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம ।
பாஷாகாநம் ந காதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்" என்ற யமவசநத்
தின்படியே பாஷாநிஷேதம் பகவத்வ்யதிரிக்தவிஷயங்களிலே யாகையா
லும், அங்ஙனன்றியே பாஷாமாத்ராவதியாக நிஷேதங்களை யங்கீகரி
க்கில் ஸம்ஸ்க்ருதபாஷையான பாஹ்யஶாஸ்த்ராதிகளப்யஸிக்கவேண்டு
கையாலும், ஆழ்வார் தம்முடைய க்ருபாதிஶயத்தாலே வேதாநதி
காரிகளான ஸ்த்ரீஶூத்ராதிகளும் இழவாதபடி வேதார்த்தத்தை த்ராவி
டபாஷையாலே யருளிச்செய்கையாலும், எதிர்சூழல்புக்கு அநேகஜந்ம
ங்களெம்பெருமான்றானே தொடர்ந்து விஷயீகரிக்கைக்கடியான பாக்யத்
தையுடையராய், நிரந்தர பகவத்கடாக்ஷ பாத்ரபூதருமாய், தத்வஹிதங்
களில நிபுணராய், அவற்றினுடைய வுபதேஶத்திலும் ப்ரவ்ருத்தராய், வி
துர ஶபர்யாதிகளில் விலக்ஷணரான ஆழ்வார்பக்கலிலே யிப்ரபந்தங்க
ள் பிறக்கையாலும், இப்பாஷை நடையாடி ஶிஷ்ட ப்ரசுரமான தேஶங்
களெங்குமுண்டாய பாஷாந்தரங்களிலே பிறந்து விலக்ஷணராயுள்ளாரு
மிவற்றின வைலக்ஷண்யத்தைக்கேட்டு இவற்றை யப்யஸிக்கைக்கீடான
இப்பாஷைநடையாடுந்தேஶத்திலே பிறக்கப்பெற்றிலோமே! என்றிரு
க்கையாலும், இவற்றின் நன்மையைக்கண்டு வேதார்த்த ஜ்ஞாநத்துக்
கடைவில்லாத அவைதிகருங்கூட பரிக்ரஹிக்கை ஶ்லாக்யதாஹேதுவா
கையாலும், வேதநமென்று முபாஸநமென்று முபநிஷத்துக்களிற்சொல்
லுகிற பக்தியை இவற்றில காமமாகச்சொல்லுகையாலும், ஐஶ்வர்யகை
வல்யங்களை தூஷித்தது அல்பாஸ்திரத்வாதிதோஷத்தாலே யாகையா

லும், பரதிபாத்யனான வெம்பெருமானுடைய மாஹாத்ம்யத்தாலும், எம்பெருமானை ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கையாலும், பக்திக்குத்பாதகங்களாகையாலும், உத்பந்நையான பக்திக்கு வர்த்தகங்களாகையாலும், ஶ்ரவணாதிகளிலப்போதே நிரதிஶயப்ரீதிஜநகங்களாகையாலும், இவற்றிற்சொல்லுகிற அர்த்தங்களுக்கு வேதத்தில் பலவிடங்களிலும் ஸாக்ஷியாகச்சொல்லுகையாலும், ப்ரஹ்மகாரணவாதத்தாலும், ப்ரஹ்மஜ்ஞாநாந்மோக்ஷத்தைச்சொல்லுகையாலும், புருஷார்த்தவிஷயமான ப்ரபந்தங்களெல்லாவற்றிலு மிப்ரபந்தங்களை த்ருடதரப்ரமாணங்களாக வுபபாதித்து வைதிககோஷ்ட்டியி லபியுக்தரானவர்கள் பரிஹரித்தார்கள்.

பகவத்ப்ரஸாதத்தாலே யவனை யநுபவித்து பரிபூர்ணராயிருக்கிற விவர்க்கு எம்பெருமானைப பிரிகையும், பிரிவாலே நோவுபட்டுக்கூப்பிடுகையுங்கூடினபடி யெங்ஙனேயென்னில்; ஓரோகுணத்தையநுபவித்தா லநுபூதகுணங்களிலுண்டான ப்ரியத்வப்ரகர்ஷம் க்ஷுத்ரவிஷயங்களில வைராக்யத்தைப்பிறப்பித்து குணாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப் பிறப்பிக்கும், "வாஸோஹமிமொஸ்மொவிஸ்மொவாஸோஹமி" என்றும், ‡ "மாற்பான்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்றும், சொல்லுகிறபடியே; பின்னையக்குணங்களில் க்ரமப்ராப்தியற்றது; யாதொருபோதாசைமிக்கது, அப்போதாசைப்பட்டபொருள் கிடையாமையாலும், பகவதநுபவவிரோதியான ப்ரக்ருதி ஸம்பந்த ஸ்மரணாதிகளாலுமாக பகவத்விஷயத்திலநுபவித்த அம்ஶத்தையுமிழந்து "எந்நாள்யானுன்னை யினிவந்துகூடுவன்" என்றும் "பலநீகாட்டிப்படுப்பாயோ" என்றும் "போரவைத்தாய்ப்புறமே" என்றும் "கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ" என்றும் கூப்பிடாநிற்பர். அவனை யநுபவிக்கப்புக்கால் "அடியேனடைந்தேன் முதன்முன்னமே" என்றும் "பருகிக்களித்தேனே" என்றும் "உண்டுகளித்தேற்கும்பரென்குறை" என்றும் "தொண்டரோலலீரும்வாரீர தொழுதுதொழுதுநின்றார்த்தும்" என்றும் "எமாகிழமே லேழெழுபிறப்பு மாசதிரிதுபெற்று நம்முடைய வாழ்வுவாய்க்கின்றவா" என்றும் தாமுந் தமமுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுமாய்க்கூட்டக்களிப்பர். இப்படி பஹுகுணனான வெம்பெருமான்பக்கலிலே நிரதிஶயபக்திமான்களாய், தத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைகஸுகதுக்காராய், அவனை யல்லதறியாதபடியாய பகவதநுபவஸுகம் மிக்கபோது இதரபதார்த்தங்களுமெல்லாம் தம்மைப்போலே எம்பெருமானைப்பெற்று சுகிக்கிறனவாகவும், விஶ்லேஷமென்றொரு வகையுண்டென்றுமறியாதே லோகயாத்ரையோடொக்கமறந்து விஶ்லேஷவ்யஸநம்மிக்கா

ல் ஸம்ஸ்லேஷ ரஸமுண்டென்று மறியாதே யிதரபதார்த்தங்களுமெல்லாம் தம்மைப்போலே எம்பெருமானைப் பிரிந்து நோவுபடுகிறனவாகக் கொண்டு "நீயுந்திருமாலாலெனஞ்சங்கோட்பட்டாயே" இத்யாதியாலே யவற்றுக்குமாகத்தாம நோவுபடாநிறபர். இவர்க்கு பரியாபரியங்களொருக்காலும முடியாதே பர்யாயேண வுண்டாயிருக்கையாலே யிவர்க்கு சிந்தயந்திப்படி நித்யமாய்ச செல்லுகையாலே யிவரை நித்யசிந்தயந்தியென்றுமிற்று நம்முதலிகளருளிச்செய்வது.

ஆனல் சேதநர்க்கு ஸதரியநபாநாதிகளே ப்ராகிர்தபோகங்களாய்ச்செல்லாநிற்க, இவரைபகவதநுபவாநுகூலர்களாக்குமோ! என்னில்; திருவயோத்யையிலும் கோஸலஜநபதத்திலுமுளள ஸ்தாவரஜங்கமங்களடைய ராமகுணைகதாரகங்களாயிருக்குமபடியை யநுஸந்தித்து இதுவுமகூடுமென்றுகொள்வது,

இப்படியிருக்கிறவிவர்க்கு எம்பெருமானோடு ஸம்ஸ்லேஷமாவது- ப்ரத்யக்ஷஸமாநாகாரமான ஜ்ஞாநஸாக்ஷாத்காரம். விஸ்லேஷமாவது - பாஹ்யஸம்ஸ்லேஷாபேக்ஷைபண்ணி அது பெறாமையாலே மாநஸாநுபவத்துக்குவந்தகலக்கம்.

ஸர்வஜ்ஞனுய் ஸர்வசக்தியாய் ஸர்வநியந்தாவாய் நிரவதிகக்ருபாவானுயிருந்த வெம்பெருமா னிவருடையவநுபவத்தைமுடியநடத்தாதே இவ்வநுபவத்தை விச்சேதிதத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில; திருவயோத்யையிலும் திருக்குரவையிலும் பிரிந்தபிரிவுபோலேயிவர்க்கநுபூதகுணங்கள ஸாதமிக்கைக்காகவும மேன்மேலனநுபவிக்கவிருக்கைக்காகவும, எம்பெருமான்பக்கலபிறந்த வாசைமுதிர்ந்துநிலைநின்றபடிபெருவிட்டவாறேபோகமோஹங்கள்பிறக்கும. இப்படியுளளகலவியாலும பிரிவாலுமஆழ்வார்க்குவந்ததசையந்யாபதேசப்பேச்சைப்பேச்சியிக்கும.

இப்ரபந்தங்களில் ஸூக்திகள ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூபப்ரதிபாதநபரமாயிருக்குமசில ; ப்ராபநானான ப்ரத்யகாத்மவிஷயமாயிருக்கும்சில; ப்ராப்த்யுபாயத்தைச் சொல்லும்சில; பலத்தைச் சொல்லுமசில; ப்ராப்திவிரோதியைச் சொல்லுமசில; அவசியமானவையிவற்றுக்குப்பாதகங்களாயிருக்கும. இவற்றிலுபதேசமயமாயுளளம், தத்த்வமாக மற்றுளளநாலாத்தமும்சொல்லுகிறது.

இவற்றில் ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் - ஸ்வதநுபவவிரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தையறுத்துத் தந்தருளவேணுமென்று, எம்பெருமானையர்த்திக்கிறார்; திருவாசிரியத்தில் - நிவ்ருத்தஸம்ஸாரர்க்குபோக்யமான தனனுடையவடிவழகைக் கலம்பகமாலையைப் பணியாக

வெடுத்துக்காட்டுமாபோலே காட்டிக்கொடுக்கக்கண் டநுபவித்தார்பூர்ணமாக; பெரியதிருவந்தாதியில் - நிரதிசயபோக்யனான எம்பெருமானையநுபவிக்கையாலே ததநுகுணமாக த்ருஷ்ணைபிறந்து த்ருஷ்ணாநுகுணமாகப்பேசியுமநினைத்துமதரிக்கிறார்; திருவாய்மொழியில் - இவருடைய த்ருஷ்ணாநுகுணமாக ஸ்ரீய:பதியாய் ஸமஸ்த கல்யாணகுணாத்மகனாய்த் தனக்குத்தகுதியான திவ்யதேஹத்தையுடையனுமாய் திவ்யபூஷணபூஷிதனுமாய சங்கசக்ராதிதிவ்யாயுததரனுமாயபரமவ்யோமத்திலே ஆநந்தமயமான திவ்யாஸ்தாநரத்நமண்டபத்திலே பெரியபிராட்டியாருந்தானும் பிராட்டிமாருங்கூடதிவ்யஸிம்ஹாஸநத்திலே ஏழுலகுந்தனிக்கோல்செல்லவீற்றிருந்தருளி *அஸ்த்ராநேபயஸங்கிகளான *அயாவருமமராகளாலே அநவரதபரிசாயமாண சரணநளிநனாய்க்கொண்டு, அங்கங்கனேசெல்லாநிற்க ஸ்வஸங்கல்பாயத்தஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திநிவ்ருத்திகமான ஸ்வேதரஸமஸ்தத்தையும் தனக்குசரீரதயாசேஷமாகவுடையனாய் அந்தராத்மதயாசேதநாசேதநங்களைவ்யாபித்துத்தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாய் நாராயணாதிநாமங்களைத் தனக்குவாசகமாகவுடையனாய் ஏவம்விதனாக "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்கிறபடியே உபநிஷத்வேத்யனுமாய், இப்படிவிஸஜாதீயனுமா யிருந்துவைத்து ஆஸ்ரிதவாத்ஸல்யத்தாலே தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாய்வந்துதன்னுடையபரமக்ருபையாலேதிருவவதாரம்பண்ணும் ஸ்வபாவனுமாயதன்னுடையஅவதாரங்களிலுமுதவப்பெறாதகாப்பதிப்பாக்யாககும்இழக்கவேண்டாதபடிஸர்வாபராதஸஹனாய பத்ரபுஷ்பாதிகளாலே ஸ்வாராதனாய்க்கொண்டு ஆஸ்ரிதர்க்கத்யந்தபரதந்த்ரனாய் அவர்களுடைய இச்சாநுகுணமான போஜநஸயநாதிகளையுடையனாய் ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனானதானே ஆஸ்ரிதஸௌலப்யாதிசயமாகக் கோயில்களிலேவந்துநின்றருளியும், இப்படியுள்ளஸர்வேஸ்வரத்வத்துக்கும் ஆஸ்ரிதாநுக்ரஹத்துக்குமேகாந்தமானபடிகளால் பரிபூர்ணனானவெம்பெருமான் தன்னை நிர்ஹேதுகமாகக்காட்டியருளக்கண்டநுபவித்துத் தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தமாகிற ப்ரதிபந்தகமற்று எம்பெருமானைப்பெற்று முடிக்கிறார். இனிச்சொல்லவேண்டுமவையெல்லா மவ்வவதிருவாய்மொழிகள்தோறும் சொல்லக்கண்டுகொள்வது.

முதற்றிருவாய்மொழியிற்சொல்லிற்றுவதுநாநாரதநபரிபூர்ணமாயபரிச்சேத்யமானகடலைமுந்தறத்திரளக்கண்டாற்போலே ஸ்வரூபரூபகுணவிபூதிகளாலே பரிபூர்ணனாய் எல்லாப்படியாலு மெல்லாரிலும்மேற்பட்டு ஸர்வேஸ்வரனாய ஸ்ரீய:பதியாக அபௌருஷேயமான ஸூத்ருட்ப

ரமாணஶ்ருதிகளாலே பரதிபாதிக்கப்படடுள்ள எமபெருமானை பாஹ்ய குத்ருஷ்டிகளால் அவிசாலயமாம்படி யவன்ப்ரஸாதததாலே ஸாக்ஷாத் கரித்தநுபவிதது, அவவநுபவஜநித பரீதியுள்ளடங்காமை யநுபவிததப டியே ஸவிபூதிகனான எம்பெருமானைப்பேசி ஏவம்விதனானவன்றிருவடிக ளிலே அடிமைசெயது உஜ்ஜீவியென்று தந்திருவுள்ளததைககுறித் தரு ளிசசெய்கிறார்; கடலைத்திரளக்கண்டாரொருவனதிலுண்டான முத்துமா ணிககாதிகளையும தனித்தனியேகாணுமாபோலே முதற்றிருவாய்மொ ழியிலே திரளவநுபவிககபபட்ட எமபெருமானுடைய குணஙகளை யோ ரோவகைகளிலே ஓரோதிருவாயமொழியாயசசெலலுகிறது இரண்டாந் திருவாய்மொழிதொடஙகிமேலெலலாம். இபபடிசெய்கை ரியரேயலலா, பாரதராமாயணாதிகளைபபண்ணின வயாஸாதிகளும் ஸமக்ஷபவிஸ்தரங் களாலே தஙகள்ப்ரபந்தங்களை பரபஞ்சிகரித்தாரகள்.

பரஸ்வரூபம் அகிலஹேயப்ரதயநீகத்வத்தாலும கல்யாணைகதாந த்வததாலும் ஸ்வேதரஸமஸ்தவஸ்துவிலக்ஷணமாய், விபுத்வாத்தேஶதஃ பரிசசேதரஹிதமாய் நித்யத்வாத்காலதஃபரிசசேதரஹிதமாய் ஸர்வமும தனக்குப்ரகாரமாகத தான்ப்ரகாரியாய்த தனக்கொரு ப்ரகாராந்தரமில் லாமையாலே வஸ்துபரிச்சேதரஹிதமுமாய ஜ்ஞாநாநந்தமயமாய்ஜ்ஞாந பலைஶ்வர்ய சீலாதயநந்த கல்யாணகுணகணமஹோததியாய் ஶ்ரிய:பதி யாய் ஸ்வேதர ஸமஸ்தத்தையும்வ்யாபிககுமிடததில அபராகருதமாய ஶுத்தஸத்வமயமாய் ஸ்வாஸாதாரணமாய் புஷ்பஹாஸ ஸுகுமாரமாய புண்யகந்தவாஸிதாநந்திகநதராளமாய் ஸாவாபாஶ்ரயமாயிருநதுள்ள திவ்யவிகரஹம்போலேவயாபித்துதரித்து நியமித்து இபபடி ஸர்வபரகா ரத்தாலும் ரக்ஷகமாய்கொண்டு சேஷியாயிருககும்; பரகருதிஸ்வருப மும் மஹதாதிவிகாரங்களையுடைத்தாய் நித்யமாய த்ரிகுணாத்மிகையாய் சுக்லக்ருஷ்ணரகதவாணையாய் அநேகப்ரஜைகளுககு பரஜநநபூதையாய எம்பெருமானுக்கு சரீரதயா சேஷமாய் சேதநா கர்மாநுகுணமாகஇச்சி கக இந்தஇசசாநுகுணமாகபகவத்ஸங்கலபத்தாலேசதுர்விம்ஶதிதத்வமா ய்கொணடுவிவரிககககடவதாய்இப்படியெம்பெருமானுககுஇஷ்டவிநி யோகார்ஹமாயிருக்கும; ஆதமஸ்வரூபம் அணுபரிமாணமாய் தேஜோத ரவ்யமாய் ஜ்ஞாதாவாய ஜ்ஞாநாநந்தகுணகமாய் நித்யமாகையாலேகால பரிச்சேதரஹிதமாய் ஜ்ஞாநத்ரவயமாகையாலே வஸ்து பரிசசேதரஹித மாய் அப்ருதகஸித்யாஹபருதங்கிர்தேஶாநர்ஹாநங்யாஹ ஶேஷமுமா ய் பரஶேஷைதக ரஸமுமாய அதயந்தபாரதந்த்ரமுமாயிருககும் எமபெ ருமானுக்கு; இத்தைப்புள்ளபடியறிவாரில தலைவராயிற்றிவா.

இவ்வாழவாதிருவாய்மொழிப்ரபந்தத்தாலசெய்ததாயிற்ற ஆத்தமேதென்னில்; முதற்றிருவாய்மொழியிலே "உயர்வறவுயாநலமுடையவன்" என்றுதொடங்கி "உணர்முழுநலம்-மிகுநனாயிலன்" நிலனிடைவிசும்பிடையுருவினனருவினன்" ஆமவையாயவையாய்நின்றவவா" என்றுசொலலிக்கொண்டுபோந்து "கரவிசுமபெரிவளி நீாநிலமிவைமிசைவானவில் திறல்வலியளிபொறையாய்நின்றபரன்" என்று தலைகட்டுகையாலே நாராயணனே பரததவமென்கைககாக நாராயணஸப்தார்தத்தையருளிசசெய்தார், ஸாவாதிகத்வமும் ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வமும் உபயவிபூதிநாதத்வமிறே நாராயணஸபதார்த்தம்; இதினுடையஸேஷமிறே *ஒன்றுந்தேவும் * திண்ணன்வீடும்; அநந்தரத்திருவாயமொழியிலே இவ்வர்த்தத்துககுவாசகமானதிருநாமந்தன்னை "வண்புகழ்நாரணன்" என்றருளிச்செய்தார்; வ்யாபகாந்தரங்களிலும் இவ்வர்த்தத்தை யறியலாயிருக்குமே, அங்ஙனன்றிக்கே யிதுவேவாசகமென்று தந்திருவுள்ளத்திலே யறுதியிட்டவாகாரந்தோற்ற "செல்வநாரணன்" திருநாரணன்" "நாரணனமுழுவேழுலகுக்குநாதன்" காராயினகாளநன்மேனிய ஞாரயணன்" "திண்ணம்நாரணன்"என்முதரித்துககொண்டுபோந்து "வாழ்புகழ்நாரணன்" என்று வழிபோக்கில் வாாத்தையுமிதுவேயாய்த்தலைகட்டுகையாலே யிதுவேவாசகமென்கிற நிரூபந்தத்தை யருளிச்செய்தாா; இனி "மலர்மகள்விரும்புநமருமபெறலடிகள்"என்றுதொடங்கி "திருவுடையடிகள்" என்றும் "மையகண்ணாளமலாமேலுறைவாளுறைமாாபினன" என்றும் "நமக்கும்பூவின்மிசைநங்கைக்குமின்பன்"என்றும் "கோலததிருமாமகளோடுனனைக்கூடாதே" என்றுமசொல்லிக்கொண்டுபோந்து "திருவாணையென்றும்" "கோலமலாபபாவைககன்பாகிய வென்னன்பே" என்றுதலைககடடுகையாலே ஸ்ரீமானானநாராயணனேபரதத்வமென்றும்சொலலிற்று. இததாலநம்மாசார்யாகளரஹஸ்யததிற்பததவயத்தாலுமருளிசசெயதுகொண்டுபோருமாத்ததுககடியிவ்வாழவாராயிருக்குமெனறதாயிற்று; ஆஸ்ரயணவேளையிலே "மலாமகள்விரும்புநமரும்பெறலடிகள்"என்றுதொடஙகி, போகவேளையிலே "கோலமலாப்பாவைக்கன்பாகியவென்னன்பே" எனறுமசொல்லுகையாலே ஆஸ்ரயணவேளையோடுபோகவேளையோடுவாசியற வொருமிதுநமேயுத்தேஸ்யமென்னுமிடம் சொல்லிற்றாயிற்று; இபபடிபரஸ்வரூபமநிர்ணீதமாயிற்று, பரஸ்வரூபபரதிஸம்பந்தியானஸ்வஸ்வரூபமிருக்குமபடி யென்னென்னில; "உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும்பரந்து" என்றுசரீராத்மபாவத்தைத்தாமநுசந்தித்துப்பிறர்க்குபதேசிக்கிறவிடத்திலே "உமதுயிர்வீடுடையானிடை"

என்று அந்த்சரீராத்மபாவந்தன்னையேயுபதேசித்து, இச்சரீராத்மபாவ
த்தால்பலிக்கிறது அநந்யார்ஹஸேஷத்வமென்னுமிடத்தை "தனக்கேயா
கவெனைக்கொள்ளுமீதே" என்றும் "அடியேனுள்ளானுடலுள்ளான்" என்
றும்சொல்லி, இது தச்சேஷத்வத்தளவிலே நிற்பதொன்றல்ல, ததீயசேஷ
த்வபர்யந்தமானாலாயிற்று தச்சேஷத்வஸித்தியென்னுமிடத்தை * பயி
லுஞ்சுடரொளி * நெடுமாற்கடிமையிலே பரக்கவருளிச்செய்து "அடி
யார்கள்குழாங்களையுடன்கூடுவதென்றுகொலோ" என்று ப்ரார்த்தித்து,
ப்ரார்த்தித்தபடியே "அடியரோடிருந்தமை" என்று தலைக்கட்டுகையாலே
பாகவதஸேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வமே ஸ்வரூபமென்னுமி
டம்சொல்லிற்று. ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தமிருக்கும்படி யென்
னென்னில்; "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்று தொடங்கி "வ
ழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றும் "பலிமானமமிறையாமே
யடியேனைப்பணிகொண்ட" என்றும் "மூகப்பேசுவிப்பணிகொள்ளாய்"
என்றும் இப்படிகளாலேயடிமையே புருஷார்த்தமென்னுமிடத்தை நிர்
ணயித்து, இதுதான் ஸாஸ்த்ரவிஹிதமென்று செய்யுமளவல்ல, ஸ்வரூப
ப்ராப்தமென்றுசெய்யுமளவல்ல, ராகப்ராப்தமென்றுசொல்லுகைக்கா
க அடியிலே "உயர்வறவுயர்நலமுடையவன்" என்றுகொண்டு ப்ராப்ய
மான குணங்களைச்சொல்லி, "சுவையன்றிருவின்மணாளன்" என்றும்
"தூயவமுதைப்பருகிப்பருகி" என்றும் குணவிஸிஷ்டவஸ்துவினுடை
யபோக்யதையையுஞ்சொல்லி, "அப்பொழுதைக்கப்பொழுதென்னாரா
வமுதம்" என்றும் "ஆராவமுதே" என்றும் "ஆராவமுதானாயே" என்
றும் இந்தபோகத்தினுடைய நித்யாபூர்வதையைச்சொல்லி, "உகந்துப
ணிசெய்துனபாதம்பெற்றேன்" என்று குணாநுபவஜநிதப்ரீதிகாரிதகைங
கர்யமே புருஷார்த்தமென்னுமிடத்தைச்சொல்லி, இது தான்யாவதாத்ம
பாவியான புருஷார்த்தமென்கைக்காக "ஏதேயின்னம்வேண்டுவதெந்
தாய்" என்று தலைக்கட்டுகையாலே பகவத்குணாநுபவஜநிதப்ரீதிகாரிதகை
ங்கர்யமே புருஷார்த்தமென்றருளிச்செய்தார்; இப்புருஷார்த்தத்துக்கு
இடைச்சுவரான விரோதிவேஷத்தை இரண்டாந்திருவாய்மொழியிலே
"வீடுமின்முற்றவும்" என்றுகட்டடங்கச்சொல்லி அதுதன்னையேமேல
மூன்றுதிருவாய்மொழியாலே விஸ்தரித்தருளிச்செய்தார்-அவையவை
யென்னில், அஸேவ்யஸேவை த்யாஜ்யமென்றார் * சொன்னால் விரோத
த்திலே, ஐஸ்வர்யகைவல்யங்கள் த்யாஜ்யமென்றார் * ஒருநாயகத்திலே,
ஸரீரஸம்பந்தநிபந்தநமாகவரும் பரிகரஹங்களத்யாஜ்யமென்றார் * கொ
ண்டபெண்டிரிலே; அங்ஙனேசொல்லலாமோ? ஸாஸ்த்ரஸித்தமான

ஐச்வர்யகைவல்யங்கள் புருஷார்த்தமாகத்தட்டென்னென்னில்; பரம புருஷார்த்தலக்ஷணமோக்ஷத்திலே அதிகரித்தவனுக்கு *ஐங்கருவிகண்ட வின்பமாகையாலும், தெரிவரிதாயளவிறந்திருந்ததேயாகிலும் பகவதநு பவத்தைப்பற்ற சிற்றின்பமாகையாலும், முமுக்ஷுவுக்கிவைத்யாஜ்யமென்றார், ஆகத்யாஜ்யவேஷத்தையருளிச்செய்தார்; த்யாகப்ரகாரமிருக்கும் படியென்னென்னில்; த்யாஜ்யமென்றால்விடுமத்தனையன்றோ; த்யாகப்ர காரமிருக்கும்படி அறியவேணுமோவென்னில்; வேணும், விஷயங்களி னின்றும்தானகடக்கவர்த்திக்கவோ? அன்றியேவிஷயங்களைநசிப்பித்துவ ர்த்திக்கவோவென்றால், இரண்டுமொண்ணாது, கடக்கவர்த்திக்கவென்று நினைத்தால் லீலாவிபூதிக்கவ்வருகேபோகவேணும்; நசிப்பித்துவர்த்திக் கவோவென்றால் பகவத்விபூதியையழிக்கையாய்விடும்; இரண்டுமொழிய விஷயஸந்நிதியினின்றும் நிர்மாநுஷ்யமானகாட்டிலே வர்த்தித்தாலோ! என்றால், ஸர்வத்தையும்விட்டுக்காட்டிலேயிருந்த ஆதிபரதனுக்குமானின் பக்கலிலேஸங்கமுண்டாய் ஜன்மபரம்பரம்பிறந்தது, ஸௌபரிநீருக்குள் ளேமுழுகிக்கிடக்கச்செய்தே அங்கேசிலமத்ஸ்யஸஞ்சாரத்தைக்கண்டுவி ஷயபரவசனானான், ஆகையாலேத்யாகப்ரகாரமிவையல்ல; ஆனாலேதா வதென்னென்னில், "நீர்நுமதென்றிவைவேர்முதல்மாய்த்திறைசேர்மின்" என் றுதேஹத்திலாத்மபுத்தியையும், தேஹாநுபந்திகளான பதார்த்தங்களில் மமதாபுத்தியையுந்தவிருகைத்யாகப்ரகாரமென்று பிறர்க்குபதேசித்தார், "யானேயென்னையறியகிலாதே யானேயென்றனதேயென்றிருந்தேன்" என்று தாமுமநுஸந்தித்தார், "நிவ்ருத்தராகஸ்ய க்ருஹந்தபோவநம்" என்று- நிவ்ருத்தராகனாயிருக்குமவனுக்குத்தானிருந்ததேசமேதபஸ்ஸுக் கேகாந்தஸ்தலமென்றதாயிற்று; இப்படியெங்கேகண்டோமென்னில், ஸ்ரீஜநகராஜன்பக்கலிலும் ஸ்ரீகுலசேகரப்பெருமாள்பக்கலிலுங்கண்டுகொ ளவது; ஆகையாலேபுத்தித்யாகமேத்யாகமென்றபடி; இவ்விரோதிநிவ்ரு த்திக்கும் புருஷார்த்தஸித்திக்குமுபாயமேதென்னில்; த்ரைவர்ணிகாதி காரமானபக்தியும் அகிஞ்சநாதிகாரமானப்ரபத்தியுமென்றிரண்டிறே வே தாந்தஸித்தமானவுபாயம், இதில் ப்ரபத்தியேயுபாயமென்று தமக்குவி த்தாந்தமென்னுமாகாரந்தோற்ற வுபாயவேஷத்தை யருளிச்செய்தார், "நோற்றநோன்பிலேன்" என்றுதொடங்கி "ஆறெனக்குநின்பாதமேசர ணாகத்தந்தொழிந்தாய்" என்றும், "உழலையென்பிற் பேய்ச்சிமுலையூட வளையுயிருண்டான்கழல்களவையேசரணாகக்கொண்ட" என்றும், "நாம ங்களாயிரமுடைய நம்பெருமானடிமேற்சேமங்கொ டென்குருகூர்ச்சட கோபன்" என்றும், "நாகணைமிசைநம்பிரான்சரணேசரணமக்கு" என்

றும்சொல்லிக்கொண்டுபோநது. "ஆவிகசோாபறறுக்கொம்புநின்னலா லறிகின்றிலேன" என்றுதலைக்கட்டுகையாலே திருவடிகளேயுபாயமென் றருளிசசெய்தார்; இத்தைப்பிறர்க்குபதேசிக்கிறவிடததிலும "திருநார ணன்றாள்காலம்பெறசசிந்திததுய்ம்மினோ"என்றும், "ஆறெனக்குநினபா தமே" என்றும், "கழல்களவையே" எனறும "சரணேசரணமககு" எ ன்றுமவதரிக்கையாலே உபாயபூர்ததியையருளிச்செய்தார்; இவவுபாய த்துக்கதிகாரிகளாவாராரென்னில்; "மயர்வறமதிநலமருளினன்" என் றவிட்த்திலெனக்கருளினனென்கைக்குத் தம்மைக்காணுமையாலே ஆகி ஞ்சந்யத்தையே புரஸ்கரித்து, உபாயநிரணயவேளையிலே "நோற்றநோ ன்பிலேனுண்ணறிவிலேன்" என்று தனைவர்ணிகாதிகாரமான உபாயாந் தரங்களிலநந்வயரூகத்தாலே ஆகிஞ்சந்யத்தைபபேசி, ஆஸ்ரயணவேளை யிலே "புகலொன்றில்லாவடியேன்" என்றுசொல்லிபோகவேளையிலத மக்குண்டானதடங்க பகவத்ப்ரஸாதலபத மென்கைக்காக "நீரனேனி றையொன்றுமிலேன்" என்றுகருந்தனையைப்பேசி, "ஒபபிலாந்தீவினை யேனையுய்யக்கொண்டு" என்றுஸாபராதஜநதுக்களுக்கும புகுரலாமென் றுதோற்றுகையாலே ஸாவாதிகாரமென்றதாயிற்று; அதிகாரியைப்பெ ற்றாலும், உபாயம்ஸித்தமானாலும், ஸ்வீகாரமிலலாதபோது ஜீவிககை யாகாமையாலே அந்தஸ்வீகாரவேஷததை "கழல்களவையேசரணாகக கொண்ட"என்றும், இதினுடையஸாங்காநுஷ்ட்டாநவேளையிலே "அடிக கீழமர்ந்துபுகுநதேன்" எனறுமருளிசசெய்தார்; இந்தஸ்வீகாரஹிருதிதா னுமவனாலேயென்னுமிடத்தை "நின்பாதமேசரணாகத தந்தொழிந்தா ய்" என்றும், "அதுவுமவனதின்னருளே"என்றுமருளிச்செயதாா; இந் தஸ்வீகர்த்தாவினுடைய அதயவஸாயவேஷததை "களைவாய்துன்பங்க ளையாதொழிவாய்களைகண்மற்றிலேன்" என்றும், "நாடொறுமேகசிந தையனாய்" என்றுமருளிச்செய்தாா; இவ்வுபாயத்தைப் பிறாககுபதேசி க்கிறவிடத்திலே "சிற்றவேண்டாசிநதிப்பேயமையும" என்றுபாயஸௌ கர்பத்தையருளிச்செய்து, இதுதன்னைஸப்ரகாரமாக வருளிசசெய்கிறவி டத்திலேஇதுபக்த்யங்கமன்று, ஸ்வதந்த்ரோபாயமெனகைககாக "சரண மாகும்" என்றுதொடங்கி "மரணமானாலவைகுந்தங்கொடுககும்பிரான" என்றுப்ராப்திபர்யந்தமாகமுடியநடத்துமெனறருளிசசெயதார்; இவ்வு பாயாத்யவஸாயமபண்ணியிருககுமவனுக்குக் காலக்ஷேபப்ரகாரமிருககு ம்படியென்னென்னில; "தொண்டாககமுதுண்ணச்சொன்மாலைகள்சொ ன்னேன்" என்றுதிருவாயமொழிதானே காலக்ஷேபப்ரகாரமென்றருளிச செய்தார்; இப்படிஉபாயததைஸ்வீகரிதது இதுவேபோதுபோக்காகத்தி

ரியுமதிகாரிக்கு பலவேஷமிருக்கும்படியென்னென்னில்; ஜிதேந்த்ரியத்வம் ப்ரதமமாய் கைங்கர்யஸித்தி சரமமாயிருக்கு மித்தனையுமுபாயபலமென்னுமிடத்தையருளிச்செய்தார். ப்ரதமத்திலேயிழியும்போது ஜிதேந்த்ரியனாய்க்கொண்டிழியவேணுமுபாஸகனுக்கு; ஜிதேந்த்ரியத்வமு முபாயபலமிவ்வதிகாரிக்கு. எங்ஙனேயென்னில்; "என்னைத்தீமனங்கெடுத்தாய்" "மருவித்தொழுமனமேதந்தாய்" என்று-ஜிதேந்த்ரியத்வமவனாலேயென்னுமிடத்தைச்சொல்லி. ஜிதேந்த்ரியனானவாறே பகவதநுபவத்துக்குபகரணமானபக்த்யாதிகள் தனக்குத்தானேயுண்டாகிறதோ? என்னில, "மயர்வறமதிநலமருளினன்" என்று - பக்திரூபாபந்நஜ்ஞாநத்தையுந்தானே தந்தானென்கையாலே பக்த்யுத்பத்தியுமவனாலே யென்னுமிடமுஞ்சொல்லிநின்றது; ஆனாலுத்பந்நையான பக்திக்கு வர்த்தகராரென்னில்; "காதல்கடல்புரையவிளைவித்தகாரமாமேனிநங்கண்ணன்" என்று அவனேவர்த்தகனென்னுமிடஞ்சொல்லி, வ்ருத்திக்கெல்லை யேதென்னில, "அதனிற்பெரியவென்னவா" என்றுதத்வத்ரயங்களையும் விளாக்குலைகொள்ளும்படிபெருகினபடிசொல்லி "என்னவாவறச்சூழ்ந்தாய்" என்று தந்திருவாயாலே யருளிச்செய்கையாலே சரீரஸம்பந்தத்தையறுத்துதேசவிசேஷத்திலேகொண்டுபோய் ஸம்ச்லேஷித்துத் தலைக்கட்டினானென்றதாயிற்று, ஆக இவ்வைந்தர்த்தமுமே திருவாய்மொழியால்ப்ரதிபாதிக்கிறது, அல்லாதவை யாநுஷங்கிகஸித்தமாய்வந்ததித்தனை, எங்ஙனேயென்னில்; பரதத்வம ஸ்ரீமந்நாராயணனென்றும், அநந்யார்ஹசேஷத்வமே ஸ்வரூபமென்றும, குணாநுபவஜநித ப்ரீதிகாரிதகைங்கர்யமே புருஷார்த்தமென்றும், அஹங்காரமமகாரங்கள் தத்விரோதியென்றும், தந்நிவ்ருத்திக்குமகைங்கர்யஸித்திக்கும ஸர்வஸுலபனான ஸர்வேச்வரனதிருவடிகளே உபாயமென்றும், ஜிதேந்த்ரியத்வந்தொடக்கமாகக்கைங்கர்யபர்யந்தமாக உபாயபலமென்றும்சொல்லிநின்றது; "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந: । ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ்ததா ப்ராப்திவிரோதி ச ॥ வதந்தி ஸகலா வேதா: ஸேதிஹாஸபுராணகா: । முநயச்ச மஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந:" என்று ஸகலவேதாத்பர்யமிவ்வர்த்தபஞ்சகமென்னுமிடத்தைப் பெரியவங்கிப்புரத்துநம்பி திருவாய்மொழிக்கு வாக்யார்த்தமாகவருளிச்செய்தார்.

## ஈடு - மஹாப்ரவேசம் - இரண்டாம்ஸ்ரீய:பதி.

ஸ்ரிய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேச்வரன், "மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து" என்

